காலாந் நமே பயமதோ கனகே ந லிப்ஸா
நைவா(அ)ஸ்மி சைசவவசேந பய: பிபாஸு: |
த்வத்–தர்சனுய து சிவ ஸ்பருஹயாமி லோபாத்
தத்ரா(அ)பி கிம் தவ ந வா ஸுகர: ப்ரகார: ||

**हे शिव** - ஏ! பரமசிவ **कालात्** - யமனிடத்திலிருந்து **मे**-எனக்கு **न भयम्** - பயம் இல்லை. **अथो** - மேலும் **कनके** - ஸ்வர்ணத்தில் **न लिप्सा** - அடையவேண்டும் என்ற ஆசையும் இல்லை. **शैशव-वशेन** குழந்தைப் பருவத்தில் **पयः पिपासुः** பாலைக்குடிக்கவேண்டும் என்ற ஆசை உள்ளவனுகவும் **न एव** - இல்லை இல்லை. **लोभात्** - பேராசையால் **त्वद्दर्शनाय** - உம்முடைய தர்சனத்திற்காக **स्पृहयामि** - ஆசைப்படுகிறேன். **तत्रापि** அந்த விஷயத்தில் கூட **प्रकारः** - ஒரு வழி **तव** - உமக்கு **किं वा न सुकरः** - ஸுலபமாகச் செய்துவைக்க முடியாதா?

எனக்கு, தாங்கள் மற்ற பக்தர்களுக்குச் செய்த உதவி செய்ய வேண்டாம். ஒரு பக்தருக்கு யமனுடைய பயத்தை நீக்கினீர். ஒரு பக்தருக்கு, வேண்டிய பொன் கொடுத்து உதவினீர். மற்றும் ஒருவருக்குச் சிறு வயதில் பால் கொடுக்கச்செய்து அனுக்ரஹம் செய்தீர்கள். நான் இப்படி எதையாவது கேட்கின்றேனு? ஒன்றும் இல்லையே. நான் விரும்புவதெல்லாம் தங்கள் தர்சனம் மட்டும் தானே. இதைத்தாங்கள் லகுவாய்ச் செய்துவைக்க முடியாதா?

குறிப்பு: ச்வேதன் என்ற ராஜருஷி யம பயத்தினின்றும் பரமேச்வரனுல் விடுவிக்கப்பட்டான்; மருத்தன் என்ற அரசன் தபஸ்ஸினுல் சிவனை த்ருப்தி செய்வித்துத் தன்



நகரத்தில் சிவன் அருளால் ஏழு நாட்கள் பொன்மழை ஏற்படும்படி செய்து கொண்டான்; உபமன்யு என்ற முனிகுமாரன் பால் பருகவேண்ட க்ஷீரஸமுத்ரத்தையே சிவன் அருளினுர். மார்க்கண்டேயருக்கு யமனை உதைத்து அபயம் அளித்ததும், சுந்தரமூர்த்தி நாயனுருக்கு வேண்டும் போதெல்லாம் பொன் அளித்ததும், திருஞானசம்பந்தருக்குச் சீர்காழியில் அம்பிகையின் திருமுலைப்பால் தருவித்ததும் எல்லோரும் நன்கு அறிந்ததே.

**यज्जन्म दुर्लभमुशन्ति मनुष्यलोके**
**तत्प्राप्तमप्यतनुपूर्वशुभप्रभावात् ।**
**जातं वृथैव मम यत्र मुहुः कदाऽपि**
**नैवान्वभावि भवदर्चनभक्तिसौख्यम् ॥ २४ ॥**

யஜ்ஜன்ம துர்லபமுசந்தி மனுஷ்ய–லோகே
தத் ப்ராப்தமப்யதநு–பூர்வ–சுப–ப்ரபாவாத் |
ஜாதம் வ்ருதைவ மம யத்ர முஹு: கதா(அ)பி
நைவாந்வபாவி பவதர்சன–பக்தி–ஸௌக்யம் || (24)

**यत्** - எந்த **जन्म** - ஜன்மமானது **मनुष्यलोके**-மனுஷ்ய லோகத்தில் **दुर्लभम्** - கிடைத்தற்கு அரிது என்று **उशन्ति**-சொல்லுகிறுர்களோ **तत्** அந்த ஜன்மமானது **अतनु-पूर्व-शुभ-प्रभावात्** - மிகவும் பெரியதான பூர்வஜன்ம புண்ணிய மகிமையினுல் **प्राप्तम् अपि** (என்னுல்) அடையப்பட்டிருந்தும் **मुहुः यत्र** அடிக்கடி கிடைத்த எந்த மனுஷ்ய ஜன்மத்தில் **कदाऽपि** - ஒருபொழுதும் **भवदर्चन-भक्ति - सौख्यम्** - உம்மைப் பூஜிப்பது பக்தி செய்வது இவற்றின் ஸௌக்கியம் **न अन्वभावि** (என்னுல்) அனுபவிக்கப்படவில்லையோ **तत्** - அந்த என் மனுஷ்யஜன்மம் **मम**-எனக்கு **वृथा एव जातम्**-வீணுகவே ஏற்பட்டது.

நான் அடைந்திருக்கும் இந்த மனுஷ்ய ஜன்மத்தை யன்றோ கிடைத்தற்கு அரிது என்று சொல்லுகிறார்கள்? நான் ஏதோ முன்ஜன்மங்களில் செய்த புண்ணியத்தால் இந்த மனுஷ்ய ஜன்மத்தைப் பலமுறை அடைந்திருக்கிறேன். அப்படி அடைந்த மனுஷ்ய ஜன்மத்தில் உம்மைப் பூஜிக்கவும் இல்லை. உம்மிடம் பக்தி செய்யவும் இல்லை. ஆகையால் அந்தப் பூஜை பக்தி இவைகளால் உண்டாகும் ஸௌக்கியத்தையும் அடையவில்லை. ஆதலால் மானிட ஜன்மம் எனக்குக் கிடைத்ததும் வீணே.

**जातिर्महेश्वर भुजंगमपुंगवानाम्**
**स्तुत्या वरं भवदलंकृतिवाहकृत्यैः ।**
**मानुष्यकं तु मम धिक्कलया कयापि**
**यन्नोपयोगमगमत्त्वयि मच्छरीरम् ॥ २५ ॥**

ஜாதிர் மஹேச்வர புஜங்கம—புங்கவாநாம்
ஸ்துத்யா வரம் பவதலங்க்ருதி—வாஹ—க்ருத்யைঃ |
மாநுஷ்யகம் து மம திக் கலயா கயா(அ)பி
யந்நோபயோகமகமத் த்வயி மச்சரீரம் || (25)

**हे महेश्वर** - ஏ பரமசிவ! **भुजङ्गम-पुंगवानाम्** - பாம்புகளினுடையவும் வ்ருஷபங்களினுடையவும் **जातिः** - ஜாதியானது **भवद्-अलंकृति-वाह-कृत्यैः** - உமக்கு அலங்காரமாகவும் வாஹனமாகவும் இருக்கும் கைங்கர்யங்களால் **वरं स्तुत्या** - மிகவும் ஸ்தோத்ரம் செய்யத் தகுந்தது. **यत्** - எக்காரணத்தால் **कयाऽपि कलया** - ஒரு எள் அளவேனும் **त्वयि** - உம்மிடம் **मत्-शरीरम्** - என்னுடைய தேகம் **उपयोगम् न अगमत्** - உபயோகத்தை அடையவில்லையோ **तत्** - அந்தக் காரணத்தினால் **मम मानुष्यकं तु धिक्** - என்னுடைய மனுஷ்யத் தன்மையைப் பொசுக்கவே வேண்டும்.



ஏ பரமசிவ! நான் அடைந்த மனுஷ்ய ஜன்மத்தை விட பாம்பினுடைய ஜன்மமும், வ்ருஷபத்தினுடைய ஜன்மமும் மேலானது. பாம்போ உமக்கு அலங்காரமாய் இருக்கிறது. வ்ருஷபமோ உமக்கு வாஹனமாய் இருக்கிறது. ஆகையால் இவ்விரண்டு ஜன்மங்களும் ஸ்தோத்ரம் செய்யத் தக்கன. என்னுடைய மனுஷ்ய சரீரமோ தங்களுக்கு எவ்விதமாகவும் உபயோகப்படவுமில்லை. ஆகையால் இந்த என் மனுஷ்ய ஜன்மத்தைப் பொசுக்க வேண்டும். சிறந்ததான மானிடஜன்மம் எடுத்துப் பக்திசெய்யாவிட்டாலும் வேறு எவ்வகையிலாவது என் உடல் சிவ கைங்கர்யத்தில் ஈடுபட்டதா? இல்லை.

**शश्वद्भृशव्यसनितामपि मेऽवधार्य**
**धत्से कथं परमकारुणिकोऽप्यवज्ञाम् ।**
**किं नाथ पश्यसि न यत्परिहृत्य शङ्काम्**
**लग्नोऽनिशं शिव शिवेति मम प्रलापः ॥ २६ ॥**

சச்வத் ப்ருச—வ்யஸனிதாமபி மே (அ)வதார்ய
தத்ஸே கதம் பரம—காருணிகோ (அ)ப்யவஜ்ஞாம் |
கிம் நாத பச்யஸி ந யத் பரிஹ்ருத்ய சங்காம்
லக்நோ (அ)நிசம் சிவ சிவேதி மம ப்ரலாபঃ|| (26)

**मे** - என்னுடைய **शश्वत्** - அடிக்கடி **भृश-व्यसनिताम्** - அதிகமாக வருந்தி யிருக்கும் நிலையை **अवधार्य अपि** - அறிந்துகொண்டும் **त्वं** - நீர் **परम-कारुणिकः अपि**-மிகவும் கருணையுள்ளவராய் இருந்தபோதிலும் **कथं** - எப்படி **अवज्ञां धत्से**-அசட்டை செய்கிறீர்? **हे नाथ** - ஏ ஸ்வாமின்! **शङ्काम्**-சந்தேகத்தை (தயக்கத்தை) **परिहृत्य** - விட்டுவிட்டு **शिव शिव इति**-சிவ சிவ என்ற **मम**-என்னுடைய **प्रलापः** - கதற

லானது **अनिशम्** - எப்பொழுதும் **लग्नः** - தொடர்ச்சியாய் இருக்கிறது **(इति) यत् (तत्)** என்பதை **किं न पश्यसि** - நீர் பார்க்கவில்லையா (கவனிக்கவில்லையா) ?

நான் அடிக்கடி அதிகமாக மனம் வருந்திக்கொண்டு இருக்கிறேன். நீங்கள் கருணையுள்ளவர் ஆயிற்றே, நான் வருந்துவதைத் தாங்கள் பார்த்துக் கொண்டிருந்தும் ஏன் என்னை அசட்டை செய்கிறீர்கள்? நான் தயக்கத்தை விட்டு 'சிவ' 'சிவ' என்று ப்ரலாபிக்கிறேன். இது தங்கள் காதில் விழவில்லையா? தாங்கள் ஏன் என்னைப் பார்க்காமல் இருக்கிறீர்கள் ? ஏன் கவனிக்காமல் இருக்கிறீர்கள் ?

**रक्तार्द्रचर्मवसनाय महाश्मशान-**
**धाम्नेऽस्थिभूषणवते फणिकङ्कणाय ।**
**रक्षःपिशाचसचिवाय बलिं प्रयामः**
**रूपाय ते हर युगान्तनिशाचराय ॥ २७ ॥**

ரக்தார்த்ர—சர்ம—வஸனாய மஹா—ச்மசான—
தாம்னே (அ)ஸ்தி—பூஷணவதே பணிகங்கணாய |
ரக்ஷ:—பிசாச—ஸசிவாய பலிம் ப்ரயாம:
ரூபாய தே ஹர யுகாந்த—நிசாசராய || (27)

**हे हर**-ஏ ஸம்ஹார மூர்த்தியே! **रक्त-आर्द्र-चर्म-वसनाय** - ரத்தத்தால் நனைந்த (யானையின்) தோலை வஸ்திரமாக உடையதும் **महा-श्मशान धाम्ने** - மஹா ச்மசானத்தை இடமாகவுடையதும் **अस्थि-भूषणवते** - எலும்பை ஆபரணமாக உடையதும் **फणि-कङ्कणाय** - பாம்பை வளையாக உடையதும் **रक्षः-पिशाच - सचिवाय** - ராக்ஷஸர்களோடும் பிசாசர்களோடும் கூடியிருப்பதும் **युगान्त - निशाचराय** - யுகத்தின் முடிவாகிய ப்ரளயகால ராத்திரியில் சஞ்சரிப்பதுமான **ते रूपाय** - உம்முடைய உருவத்திற்கு **बलिं प्रयामः** - நிவேதநமாக ஆகிறோம்.

ஏ ஸம்ஹார மூர்த்தியே! தாங்கள் ரத்தம் தோய்ந்த யானையின் தோலை ஆடையாய் உடுத்து இருக்கிறீர்கள். மஹாச்மசானத்தை வாஸஸ்தானமாகக் கொண்டு இருக்கிறீர்கள். பாம்பை வளையாக அணிந்து இருக்கிறீர்கள். ராக்ஷஸர்களோடும் பிசாசுகளுடனும் கூடியிருக்கிறீர்கள். யுகத்தின் முடிவாகிய ப்ரளயகாலத்தில் சஞ்சரிக்கிறீர். உம்முடைய உருவத்திற்கு நிவேதனம் ஆகிறோம்.



**दिव्योत्तरीयभृति कौस्तुभरत्नभाजि**
**देवेऽपरे दधतु लुब्धधियोऽनुबन्धम् ।**
**रूपं दिगम्बरमखण्डनृमुण्डचूडम्**
**भावत्कमेव तु बतेश मम स्पृहायै ॥ २८ ॥**

திவ்யோத்தரீய—ப்ருதி கௌஸ்துப—ரத்ன—பாஜி
தேவே (அ)பரே தததுலுப்த—தியோ (அ)னுபந்தம் |
ரூபம் திகம்பரமகண்ட—ந்ருமுண்ட—சூடம்
பாவத்கமேவ து பதேச மம ஸ்ப்ருஹாயை || (28)

**दिव्य-उत्तरीय-भृति** திவ்யமான உத்தரீயத்தை தரித்திருக்கும் **कौस्तुभ-रत्न-भाजि** - கௌஸ்துப ரத்னத்தை மார்பில் அலங்காரமாக அடைந்தபெருமான **अपरे देवे** மற்றொரு தெய்வமான விஷ்ணுவிடத்தில் **लुब्ध-धियः** - பேராசை கொண்டவர்கள் **अनुबन्धम्** - தொடர்பை **दधतु** - வைத்துக் கொள்ளட்டும்; **तु**-ஆனால் **हे ईश**-ஏ பரமேச்வர! **दिगम्बरम्**-திக்கையே வஸ்திரமாக உடையதும் **अखण्ड-नृमुण्ड-चूडम्**-

மனிதனின் முழு மண்டை யோட்டை தலையில் ஆபரண மாக உடையதுமான **भावत्कम्** - உம்முடைய **रूपम् एव** - ரூபமே **मम स्पृहायै** - என் விருப்பத்திற் குரியதாகிறது.

திவ்ய பீதாம்பரம் தரித்துக் கௌஸ்துபரத்னத்தை மார்பில் அணிந்த விஷ்ணுவிடம் ப்ரீதி வைக்கிறவர்கள் ப்ரீதி வைக்கட்டும். திக்கையே தனக்கு ஆடையாகவும், மண்டை யோட்டையே ஆபரணமாகவும் உடைய பரம சிவனாகிய உம்மிடத்திலேயே என் மனம் செல்லுகிறது.

**जीवामि चेदथ पृथुप्रियविप्रयोग-**
**रोगादयो नरकदुःखभियोऽन्यथाऽपि ।**
**घ्नन्त्येव मामुभयथाऽप्यसुखोऽहमित्थम्**
**अत्रोचितं हर चर स्वकृपालुतायाः ॥ २९ ॥**

ஜீவாமி சேதத ப்ருது--ப்ரிய--விப்ரயோக--
ரோகாதயோ நரக--துக்க--பியோ(அ)ன்யதா(அ)பி |
க்னந்த்யேவ மாமுபயதா(அ)ப்யஸுகோ(அ)ஹமித்தம்
அத்ரோசிதம் ஹர சர ஸ்வக்ருபாளுதாயாஃ || (29)

**जीवामि चेत्** - உயிரோடு இருப்பேனாகில் **पृथु-प्रिय-विप्रयोग-रोगादयः** - மிகவும் ப்ரியமுள்ளவருடைய பிரிவும் வியாதி முதலியவையும் **घ्नन्ति एव** - துன்பப்படுத்திக் கொண்டே இருக்கும். **अथ** - அல்லது **अन्यथा अपि** - இறந்து போவோம் என்றாலும் **नरक दुःख भियः** நரகத்தில் அனுபவிக்கப்படவேண்டிய துக்கங்களின் பயம் **मां** - என்னை **घ्नन्ति एव** - நிச்சயமாய்த் துன்பப்படுத்துகின்றது. **इत्थं** - இவ்வாறாக **उभयथा अपि** - இரண்டு வகையிலும் **अहम् असुखः** - நான் ஸுகம் இல்லாதவனாய் இருக்கிறேன். **अत्र** - இந்த விஷயத்தில் **हे हर** - ஏ பரமசிவ! **स्वकृपालुतायाः**



தயவு உள்ளவராய் இருக்கும் தங்கள் தன்மைக்கு **उचितं**- உசிதமாக உள்ளதை **चर** - செய்யுங்கள்.

உயிரோடு இருப்போம் என்றால் பிரியமுள்ளவர்கள் பிரிவு, வியாதி, முதலிய துன்பங்கள் துன்பப் படுத்து கின்றன. இல்லை, இறந்து போவோம் என்றால் நரகத்தில் அனுபவிக்க வேண்டிய துக்கங்களின் பயமும் விடுவ தில்லை. இப்படி இரண்டு வகையிலும் என்னைத் துன்பங்கள் சூழ்ந்து கொண்டு துன்புறுத்துகின்றன. ஏ பரமசிவ! இப்படித் துன்பப்படும் எனக்கு உம் கருணையுள்ள தன் மைக்கு எது தகுதியாகத் தோன்றுகிறதோ அதைச் செய்யுங்கள்.

**यत्रेन्द्रियाणि विरमन्ति निजक्रियाभ्यः**
**यात्यान्तरोऽपि करणप्रसरोऽवसादम् ।**
**प्राणास्त्रुटन्ति च समस्तनिराशभूतम्**
**मामेत्य शंकर कुतोऽपि तदा दयेथाः ॥ ३० ॥**

யத்ரேந்த்ரியாணி விரமந்தி நிஜ--க்ரியாப்யஃ
யாத்யாந்தரோ(அ)பி கரண--ப்ரஸரோ(அ)வஸாதம் |
ப்ராணாஃ த்ருடந்தி ச ஸமஸ்த--நிராசபூதம்
மாமேத்ய சங்கர குதோ(அ)பி ததா தயேதாஃ || (30)

**यत्र** - எந்தக் கடைசி காலத்தில் **निजक्रियाभ्यः** - தங்களுடைய தொழில்களில் இருந்து **इन्द्रियाणि**-இந்திரியங்கள் **विरमन्ति** - ஓய்வடைகின்றனவோ **आन्तरः करण प्रसरः अपि**- அந்த:கரணத்தின் செய்கையும் **अवसादं याति** - ஓய்வு அடைகின்றதோ **प्राणाः च त्रुटन्ति**-ப்ராணன்களும் துண்டித் துப்போகின்றனவோ **तदा** - அப்பொழுது **समस्त-निराश-भूतं मां** எல்லாவற்றிலும் ஆசை (நம்பிக்கை) அற்றுப்போன

என்னை **हे शंकर** - ஏ பரமசிவ ! **कुतः अपि** - எங்கிருந்தோ **एत्य** - வந்து **दयेथाः** - தயவு செய்ய வேண்டும்.

என் கடைசிக் காலத்தில் (நான் மரணம் அடையும் காலத்தில்) என் இந்திரியங்கள் அவைகள் செய்யும் தொழில்களைச் செய்யாமல் ஓய்வடைகின்றன. அந்தஃ-கரணத்தின் சக்தியும் அடங்குகிறது. இந்தத் தசையில் எத்துணையிலும் நம்பிக்கை அற்றவனாக இருக்கிறேன். ஏ, பரமசிவ! இத்தசையில் இருக்கும் என்னைக் காப்பாற்ற எங்கிருந்தாவது வந்து எனக்குக் கிருபை செய்யும்.

**स्वाशेषपूर्वदुरितस्मरणादुदेति**
**यत्रासमं भयमसुप्रशमप्रसङ्गे ।**
**कः कान्दिशीकमनसः शरणं तदा मे**
**स्वामिंस्तवैव समयः स कृपालुतायाः ॥ ३१ ॥**

ஸ்வாசேஷ—பூர்வ—துரித—ஸ்மரணாதுதேதி
யத்ராஸமம் பயமஸு—ப்ரசம—ப்ரஸங்கே |
கஃ காந்திசீக—மனஸஃ சரணம் ததா மே
ஸ்வாமின் தவைவ ஸமயஃ ஸ க்ருபாளுதாயாஃ || (31)

**यत्र** - எந்த **असु-प्रशम-प्रसङ्गे** என்னுடைய ப்ராணன் அடங்கும் ஸமயத்தில் **स्व-अशेष-पूर्व-दुरित-स्मरणात्**-என்னால் முன் செய்யப்பட்ட எல்லாக் கெடுதல்களின் நினைவால் **असमम्** - ஒப்பில்லாத **भयम् उदेति**-பயம் உண்டாகிறதோ **तदा** - அப்பொழுது **कांदिशीकमनसः** திக்ப்ரமை கொண்ட (பயந்த) மனத்தை உடைய **मे** - எனக்கு **कः शरणं** - யார் ரக்ஷகர்? **हे स्वामिन्**-ஏ நாத! **तव** - உம்முடைய **कृपालुतायाः** - கிருபை உடையவராய் இருக்கும் தன்மைக்கே **सः एव** **समयः** - அது தக்க ஸமயம்.



என் பிராணன் ஒடுங்கும் தறுவாயில் நான் முன் செய்த பாப கர்மங்கள் என் ஞாபகத்திற்கு வருகின்றன. அதனால் ஒப்பிட முடியாத பயத்தை அடைகிறேன். அதனால் திக்கற்றவன்போல் திகைக்கின்றேன். அந்த ஸமயம் நான் யாரைச் சரணமாக அடைவேன்? இப்படி நான் உழலும் ஸமயத்தில்தான் நீர் என்னை ஆட்கொள்ள வேண்டும். அந்த ஸமயத்தில் தான் தாங்கள் கிருபா ஸமுத்ரம் என்பதைக் காட்ட வேண்டும்.

**अद्यैव यामि शरणं परमेश्वर त्वां**
**शक्ष्यामि किं ननु तदाऽऽहतसर्वशक्तिः ।**
**मृत्युर्यदा मम भयाय पतत्यकस्माद्**
**अन्धस्य वक्त्र इव हस्ततलप्रहारः ॥ ३२ ॥**

அத்யைவ யாமி சரணம் பரமேச்வர த்வாம்
சக்ஷ்யாமி கிம் நநு ததா(ஆ)ஹத—ஸர்வ—சக்திஃ |
ம்ருத்யுர் யதா மம பயாய பதத்யகஸ்மாத்
அந்தஸ்ய வக்தர இவ ஹஸ்த—தல—ப்ரஹாரஃ || (32)

**यदा**-எந்த ஸமயத்தில் **अन्धस्य** - குருடனுடைய **वक्त्रे** - முகத்தில் **हस्त - तल - प्रहारः इव** - கையால் (திடீரென்று) கொடுக்கப்பட்ட அடியைப் போல் **मृत्युः** - யமன் **अकस्मात्**-திடீரென்று **मम** - எனக்கு **भयाय पतति** - பயத்தை உண்டு பண்ண வருகிறானோ, **तदा** - அந்த ஸமயத்தில் **ननु** - நிச்சயமாய் **आहत-सर्व-शक्तिः** - சர்வ சக்திகளும் ஒடுங்கியவனாய் **किं शक्ष्यामि** - நான் என்ன செய்ய முடியும்? ஆகையால் **हे परमेश्वर** - ஏ பரமசிவ! **त्वां** - உம்மை **अद्यैव** - இப்பொழுதே **शरणं यामि** - சரணம் அடைகிறேன்.

யமன் திடீரென்று சொல்லாமலே வந்துவிடுவான். கண்ணில்லாதவனைத் திடீரென்று முகத்தில் அடித்தால் எப்படிப் ப்ரமித்து நிற்பானோ, அம்மாதிரி யமன் என்னிடம் வரும் காலத்தில் எனக்கு ஸர்வ சக்திகளும் அடங்கிக் கிடக்கும். அந்தக் காலத்தில் ம்ருத்யுவைத் தடுக்கும் சக்தியும் சரணாகதி செய்யும் சக்தியும் இரண்டும் எனக்கு இல்லாமல் போகும். ஆகையால் தங்களை இன்றே சரணம் அடைகிறேன்.

**आर्तिक्षणे सपदि विस्मर तात मातः**
**इत्यादिकं च विफलं कृपणप्रलापम् ।**
**शर्वेश शंकर शिवेति नुतिं भजस्व**
**जिह्वे यतो विघटतेऽखिलदुःखभारः ॥ ३३ ॥**

ஆர்த்தி—க்ஷணே ஸபதி விஸ்மர தாத மாத:
இத்யாதிகம் ச விபலம் க்ருபண—ப்ரலாபம் |
சர்வேச சங்கர சிவேதி நுதிம் பஜஸ்வ
ஜிஹ்வே யதோ விகடதே (அ)கில துக்கபார: || (33)

**हे जिह्वे** - ஏ நாக்கே! **आर्तिक्षणे** - மரண வேதனையின் போது **तात-मातः इत्यादिकं** - அப்பா, அம்மா முதலிய **विफलं** - ப்ரயோஜனமற்ற **कृपण-प्रलापं** தீன அழுகையை **सपदि** - உடனே **विस्मर** - மறந்துவிடு. **यतः** எந்தச் சிவ நாமாவின் உச்சரிப்பினால் **अखिल-दुःख-भारः**-எல்லாத் துக்க பாரமும் **विघटते** - சிதறி விடுகின்றதோ (அப்படிப்பட்ட) **हे शर्व, ईश, शंकर, शिव इति** - ஏ சர்வ! ஏ ஈச! ஏ சங்கர! ஏ சிவ! என்ற **नुतिम्** - ஸ்தோத்ரத்தை **भजस्व** - செய்

ஏ நாக்கே! மரண வேதனை அடையும் காலத்தில் எல்லோரையும்போல் அப்பா அம்மா ஐயோ என்னும் பய



னற்ற சொற்களை அறவே மறந்துவிடு. ஏ சர்வ! ஏ ஈச! ஏ சங்கர! ஏ சிவ! என்னும் ஈச்வர நாமாக்களைச்சொல்லு. இந்த ஈச்வர நாமாக்களால் அன்றோ சகல துன்பங்களும் சிதறி விடுகின்றன.

இம்மாதிரியே தேவாரத் திருவாசகங்களிலும் கூறப்பட்டிருக்கின்றது. நாக்கைப் போல் தேகங்களின் மற்ற இந்திரியங்களையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும்.

**स्वास्थ्ये मदात्कति न दुश्चरितानि नाम**
**नाथ व्यधां गतविवेकतया विशङ्कः ।**
**संस्मृत्य मृत्युभयमद्य तु विह्वलोऽस्मि**
**श्रीकण्ठ भोक्तुमपि येन न पारयामि ॥ ३४ ॥**

ஸ்வாஸ்த்யே மதாத் கதி ந து:சரிதானி நாம
நாத வ்யதாம் கதவிவேகதயா விசங்க: |
ஸம்ஸ்ம்ருத்ய ம்ருத்யு—பயமத்ய து விஹ்வலோ(அ)ஸ்மி
ச்ரீகண்ட போக்துமபி யேன ந பாரயாமி || (34)

**हे नाथ** - ஏ ஸ்வாமி! **स्वास्थ्ये** - நன்றாய் ஸ்வஸ்தமாக இருந்த காலத்தில் **मदात्** - மதத்தினால் **विशङ्कः** பயமில்லாமல் **गत-विवेकतया** விவேகம் இழந்த காரணத்தினால் **कति दुश्चरितानि नाम**-எந்தக் கெட்ட கார்யங்களைத்தாம் **न व्यधां**-(நான்) செய்யவில்லை. **हे श्रीकण्ठ** - ஏ ச்ரீகண்ட! **मृत्यु-भयं** - யமனுடைய பயத்தை **संस्मृत्य** - நினைத்து **अद्य तु**- இப்பொழுதோ **विह्वलः अस्मि** நடுங்கினவனாய் இருக்கிறேன். **येन** - எந்த மிருத்யு பயத்தினால் **भोक्तुम् अपि** - உண்பதற்குக்கூட **न पारयामि** - தகுதியற்றவனாய் இருக்கிறேன்.

ஸ்வஸ்தமாய் இருந்தகாலத்தில் விவேகத்தை இழந்து மத்தினால், பயமில்லாமல், நான் எந்த எந்தக் கெட்ட

கார்யங்களைத்தாம் செய்யவில்லை. அந்தக் கெட்ட காரியங்களின் பலனைக் கொடுப்பதற்கு ஸித்தமாய் உள்ள யமனை நினைத்து இப்பொழுது நடுங்குகின்றேன். இந்தக் காரணத்தினால் சாப்பிடுவதற்குக்கூடத் தகுதியற்றவனாய் இருக்கிறேன்.

पूर्वं न चेद्विरचिता तव देव सेवा
तेनैव नैव दयसे श्रयतो ममार्तिम् ।
किं प्रागसंस्तुत इति प्रतिपन्नमूल-
च्छायं गतश्रमरुजं न तरुः करोति ॥ ३५ ॥

பூர்வம் ந சேத் விரசிதா தவ தேவ ஸேவா
தேனைவ நைவ தயஸே ச்ரயதோ மமார்த்திம் |
கிம் ப்ராகஸம்ஸ்துத இதி ப்ரதிபன்ன—மூல—
ச்சாயம் கத—ச்ரம—ருஜம் ந தருः கரோதி || (35)

**हे देव** - ஏ ஸ்வாமின்! **पूर्वं** - முன்பு **तव सेवा** - உம் ஸேவை **न विरचिता चेत्** - பண்ணப்படவில்லையேல் **तेनैव** - அந்தக் காரணத்தினாலேயே **आर्तिम् श्रयतः** (மரண) வேதனையை அடைந்துகொண்டிருக்கும் **मम** எனக்கு **नैव दयसे** நீர் தயவு செய்யவில்லையா? **तरुः** - விருக்ஷமானது **प्रतिपन्न-मूल-च्छायं** - தனது அடிநிழலை அடைந்தவனை **प्रागसंस्तुतः इति** - முன்பு பழக்கமில்லாதவன் என்று **गत-श्रम-रुजं** - களைப்பின் பீடையகன்றவனாக **किं न करोति** - செய்கிறதில்லையா?

நான் தங்களை ஸேவிக்கவில்லை. இந்தக் காரணத்தை முன்னிட்டு இப்பொழுது மரண வேதனையை அடைந்த என் மீது தயவு செய்யாமல் இருந்துவிடுவீர்களா? விருக்ஷமானது நிழலைத் தந்து தன்னிடம் வந்தவர்கள் சிரமத்தைப் போக்குகிறது. தன்னிழலை அடைந்தவனை "நீ முன்பு என்னிடம் பழகாதவன், உனக்கு நிழலைக் கொடுக்கமாட்டேன்" என்று சொல்லுகிறதா? சொல்லுகிறதில்லை. அம்மாதிரி தங்களை முன்பு ஸ்தோத்ரம் செய்யவில்லை என்ற காரணத்தினால் இப்பொழுது சரணம் அடைந்த என்னைக் கைவிடமாட்டீர்கள் என்பது நிச்சயம்.



கடவுளுக்குக் கருணை புரிவது ஸ்வாபாவிகமான குணம் என்று கவி இந்தச் சுலோகத்தால் விளக்குகிறார்.

ज्ञानप्रकाशसुलभं शिव दर्शनं ते
जात्यन्धतैव च परं मम तद्वियोगात् ।
तत्तां त्वमेव किल कामपि देहि युक्तिम्
व्यक्तिं ययैष्यसि मम श्रममन्तरेण ॥ ३६ ॥

ஞான—ப்ரகாச—ஸுலபம் சிவ தர்சனம் தே
ஜாத்யந்ததைவ ச பரம் மம தத்வி—யோகாத் |
தத்தாம் த்வமேவ கில காமபி தேஹி யுக்திம்
வ்யக்திம் யயைஷ்யஸி மம ச்ரமமந்தரேண || (36)

**हे शिव** - ஏ பரமசிவ! **ते दर्शनं** - உம்முடைய தர்சனம் **ज्ञान-प्रकाश सुलभं** - ஞான வெளிச்சத்தால் பார்ப்பதற்கு ஸுலபமானது (எளிதானது); **मम परम्** எனக்கோ என்றால் **तद्-वियोगात्** - அந்த ஞான ஒளி இல்லாததால் **जात्यन्धतैव** பிறவிக் குருட்டுத்தன்மையே ஏற்பட்டிருக்கிறது. **तत्** - ஆகையால் **यया** எதனால் **मम** - எனக்கு **श्रमम् अन्तरेण** சிரமம் இல்லாமல் **व्यक्तिं एष्यसि** - ப்ரஸன்னராக ஆவீரோ **तां कामपि युक्तिं** - அந்த ஏதோ ஒரு உபாயத்தை **त्वमेव** நீங்களே **देहि** - கொடுங்கள்.

ஏ பரமசிவ! தங்களை அடைவதற்கு ஞான மார்க்கமே ஸுலபமான மார்க்கம். ஞானக்கண் உடையவர்களே தங்களைத் தர்சனம் செய்யமுடியும். எனக்கு ஞானக் என்பது இல்லை. பிறவிக் குருடனாய் இருக்கிறேன். ஆனால் எப்படியாவது நான் சிரமம் இல்லாமல் தங்களை தர்சனம் செய்தாக வேண்டும். இதற்கு வேண்டிய யுக்தியைத் தாங்களே செய்யவேண்டும்.

மேலே 17, 29-வது சுலோகங்களில் சொன்னது போல் இங்கும், கவி பாரம் முழுவதையும் ஈச்வரன் பேரிலேயே போடுகிறார்.

**प्राप्येदृशीमपि मनुष्यदशां न पुण्ये**
**ज्ञानेऽथवा विधिहतोऽप्यगमं प्रतिष्ठाम् ।**
**सामग्र्यसावथ कुतः पुनरप्यतो मां**
**स्वामिन्नधन्यमनुकम्पितुमर्हसि त्वम् ॥ ३७ ॥**

ப்ராப்யேத்ருசீமபி மனுஷ்ய—தசாம் ந புண்யே
ஞானே(அ)தவா விதிஹதோ(அ)ப்யகமம் ப்ரிதிஷ்டாம் ।
ஸாமக்ர்யஸாவத குதః புனரப்யதோ மாம்
ஸ்வாமிந்நதன்யமனுகம்பிதுமர்ஹஸி த்வம் ‖ (37)

**ईदृशीम्** - இப்படிப்பட்ட **मनुष्यदशाम्** - மனுஷ்ய தசையை **प्राप्य अपि** - அடைந்தும்கூட **विधिहतः** - தலை விதியால் கெட்டவனாய் **पुण्ये** - புண்ணியமான கர்ம மார்க்கத்தில் **अथवा ज्ञाने अपि** - அல்லது ஞான மார்க்கத்திலாவது **प्रतिष्ठां** - நிலைத்து நிற்றலை **न अगमम्** - நான் அடையவில்லை. **पुनरपि** - மறுபடியும் **असौ सामग्री** - இப்படிப்பட்ட உபாயச்சேர்க்கை **कुतः** - எங்கிருந்து உண்டாகும் (புண்ணியம் செய்யக்கூடிய இந்த தேகம் மறுபடியும் எங்கிருந்து கிடைக்கும்)? **अतः** - ஆகையால் **हे स्वामिन्** - ஏ நாத! **त्वं** - நீர் **अधन्यं मां** - அபாக்யசாலியாகிய என் பேரில் **अनुकंपितुम् अर्हसि** - தயவு செய்யக் கடவீர்.



கிடைத்தற்கு மிகவும் துர்லபமான மனுஷ்ய தேகத்தை அடைந்தேன். மனிதனாய்ப் பிறந்தவர் தங்களை அடையக்கர்மயோகத்தையாவது ஞானயோகத்தையாவது அனுஷ்டிப்பார்கள். நான் இவ்விரண்டில் எதையும் அனுஷ்டிக்காமல் கெட்டுவிட்டேனே. மறுபடியும் இவ்வளவு ஸௌகர்யங்களோடு கூடிய மனுஷ்ய தேகம் எப்பொழுது கிடைக்கும்? ஏ ஸ்வாமின்! அபாக்யசாலியாகிய என்பேரில் தாங்கள் கிருபை செய்யவேண்டும்.

**लीनेन भूरि विषयाध्वनि सौख्यलोभात्**
**नामापि मोहितधिया कलितं न मृत्योः ।**
**आसीदतः सपदि तद्भयतो मया किं**
**शक्यं विधातुमहहा महदाकुलोऽस्मि ॥ ३८ ॥**

லீனேன பூரி விஷயாத்வனி ஸௌக்ய—லோபாத்
நாமா(அ)பி மோஹித—தியா கலிதம் ந ம்ருத்யோః |
ஆஸீததః ஸபதி தத்பயதோ மயா கிம்
சக்யம் விதாதுமஹஹா மஹதாகுலோ(அ)ஸ்மி ‖

**सौख्य लोभात्** - இன்பத்தை அனுபவிக்க வேண்டும் என்ற பேராசையால் **विषयाध्वनि** - சிற்றின்பங்கள் என்ற மார்க்கத்தில் **भूरि** - மிகவும் **लीनेन** - ஈடுபட்டவனாயும் **मोहित - धिया** - மோகம் அடைந்த புத்தியை உள்ளவனுமான (என்னால்) **मृत्योः** - யமனுடைய **नामा अपि** பெயர் கூட **न कलितं** - எண்ணப்படவில்லை. **सपदि** - திடீரென்று **आसीदतः** - கிட்ட நெருங்குகிற **तद्-भयतः** - அந்த ம்ருத்யுவின் பயத்தினின்று (அந்த ம்ருத்யு பயத்தைப் போக்க)

मया-என்னால் किं - என்ன विधातुं शक्यं - செய்யமுடியும்? अहहा - அந்தோ! महत् आकुलः अस्मि - மிகவும் மனங் கலங்கினவனாய் இருக்கிறேன்.

இன்பத்தில் பேராசை கொண்டு சிற்றின்ப ஸௌக் கியங்களில் மிகவும் முழுகி விட்டேன். இப்படி இருக்கும் பொழுது, 'யமன்' என்பவன் ஒருவன் இருக்கின்றான் என்று எண்ணவேயில்லை. ஆனால் அந்த யமன் சீக்கிர மாக ஸமீபம் வருகிறான். அவனிடம் இருந்து எனக்கு உண்டாகும் பயத்தைப் போக்க என்னால் என்ன செய்ய முடியும். அந்தோ! மிகவும் மனங்கலங்கினவனாய் இருக் கிறேன்.

या विक्रिया यमभटभ्रुकुटिच्छटानां
पीडाश्च या नवनवा नरकावनीषु ।
ता निर्विशन् भव कथं भवितास्म्यमुत्र
कुत्र व्रजामि शरणं कतरं प्रपद्ये ॥ ३९ ॥

யா விக்ரியா யம—பட—ப்ருகுடி—ச்சடானாம்
பீடா:ச யா நவ—நவா: நரகாவனீஷு |
தா நிர்விசன் பவ கதம் பவிதாஸ்ம்யமுத்ர
குத்ர வ்ரஜாமி சரணம் கதரம் ப்ரபத்யே || (39)

हे भव - ஏ பரமசிவ! यम-भट-भ्रुकुटि-च्छटानां - யம கிங்கரர்களின் புருவ நெரிப்பு வரிசைகளின் याः विक्रियाः - எந்த விகாரங்கள் உண்டோ, नरकावनीषु - நரக பூமிகளில் याः नवनवाः पीडाः - புதிது புதிதான கஷ்டங்கள் எவைகள் உண்டோ, ताः அவைகளை अमुत्र-அங்கே निर्विशन्- அனுப வித்துக்கொண்டு कथं भवितास्मि - எப்படி இருக்கப் போகிறேன்? कुत्र व्रजामि-எங்குப் போவேன்? कतरं-யாரை शरणं प्रपद्ये - சரணம் அடைவேன்?



நான் செய்த கெட்ட கார்யங்களின் பலன்களை நரகங்களில் அனுபவிக்க வேண்டும். அங்கு யம படர் களின் புருவ நெரிப்புகளைப்பற்றி என்ன சொல்லுவது? அங்கு அனுபவிக்க வேண்டிய புதிது புதிதான கஷ்டங் களைப் பற்றித்தான் என்ன சொல்லுவது? இவைகளை அங்கே எப்படி அனுபவித்துக் கொண்டிருப்பேன்? எனக்குப் புகலிடம் ஒன்றும் இல்லையே; யாரைத்தான் நான் சரணம் அடைவேன்?

स्मृत्वाऽप्यहो रविजकिंकृतहुंकृतीनां
मुह्यामि यामि विलयं भयविह्वलात्मा ।
आसन्नमेवमहहा विषमं पुरस्तात्
तत्का गतिर्मम कुकर्मनिमग्नवृत्तेः ॥ ४० ॥

ஸ்ம்ருத்வா(அ)ப்யஹோ ரவிஜ—கிம்க்ருத—ஹும்க்ருதீனாம்
முஹ்யாமி யாமி விலயம் பய--விஹ்வலாத்மா |
ஆஸன்னமேவமஹஹா விஷமம் புரஸ்தாத்
தத்கா கதிர்மம கு—கர்ம—நிமக்ன—வ்ருத்தே: || (40)

रविज-किंकृत-हुंकृतीनां - யமனுடைய கிங்கரர்களின் (படர்களின்) ஹுங்காரங்களை स्मृत्वा अपि - நினைத்தா லும்கூட अहो मुह्यामि - மயக்கம் அடைகிறேன். भय-विह्व-लात्मा - பயத்தால் தத்தளித்த மனதுடையவனாய் विलयं यामि- நாசத்தை அடைகிறேன். अहहा - அந்தோ! पुरस्तात्- எதிரில் एवम् - இப்படி विषमम् (யமகிங்கரர்கள் என்ற) கஷ்டமானது आसन्नम् एव - நெருங்கியே வந்துவிட்டது. तत् - ஆகையால் कुकर्म-निमग्न-वृत्तेः मम—கெட்ட காரியங் களில் முழுகின நடத்தையை உடைய எனக்கு का गतिः - என்ன கதிதான் இருக்கிறது?

நான் செய்த கெட்ட கார்யங்களுக்காக அந்தப் பலனை அனுபவிக்க வேண்டிய நரகங்களில் இருக்கும் யம கிங்கரர்களின் ஹூங்காரங்களை நினைத்தாலேயே இப்பொழுதே எனக்கு மயக்கம் உண்டாகிறது. பயத்தால் தத்தளிக்கிறேன். நாசத்தை அடைகிறேன். கஷ்டமானது எதிரிலேயே, நெருங்கிக்கொண்டு வருகிறது. நானோ கெட்ட வழியில் முழுகி விட்டேனே, எனக்கு என்னதான் கதி இருக்கிறது?

आसन्नपापशतसंभृतघोरपीडः
क्रन्दाम्यनन्यगतिकत्ववशात्पुरस्ते ।
तस्मात्कथं न दयसे त्वरितं कुतश्चित्
आगत्य विश्वमय सान्त्वय मां वराकम् ॥ ४१ ॥

ஆஸன்ன--பாப--சத--ஸம்ப்ருத--கோர--பீடஃ
க்ரந்தாம்யனந்ய--கதிகத்வ--வசாத் புரஸ்தே |
தஸ்மாத் கதம் ந தயஸே த்வரிதம் குதஶ்சித்
ஆகத்ய விச்வமய ஸாந்த்வய மாம் வராகம் ‖ (41)

**आसन्न-पाप-शत-संभृत-घोर पीडः** - நூற்றுக்கணக்கான பாபங்களினால் சேர்க்கப்பட்ட கடுந் துன்பங்கள் வந்து சேர்ந்தவனாய் (நான்) **अनन्य-गतिकत्व-वशात्** - வேறு புகலிடம் இல்லாததால் **ते पुरः**- உமக்கு முன்பு **क्रन्दामि**-கதறுகிறேன். **तस्मात्** - ஆகையினால் **कथं न दयसे** - எப்படித் தயவு செய்யாமல் இருக்கிறீர்? **हे विश्वमय** - ஏ ஸர்வ ஸ்வரூபரே (எங்கும் இருப்பவரே)! **कुतश्चित्** - எங்கிருந்தாவது **आगत्य** - வந்து **वराकं मां** - தீனனாகிய என்னை **सान्त्वय** - ஆச்வாஸப்படுத்தும்.

நான் செய்த கணக்கில்லாத பாபங்களின் பயனை அனுபவிக்கும் ஸமயம் கிட்டிவிட்டது. எனக்குப் புகலிடம்



யாதும் இல்லை. தங்கள் முன்பாக நான் கதறுகிறேனே. தாங்கள் ஏன் தயவு செய்யவில்லை? தாங்கள் விச்வமயர் அன்றோ! ஸர்வ வ்யாபியாய் எங்கும் இருப்பவர் அன்றோ! ஆகையால் எங்கிருந்தாவது வந்து தீனனாகிய என்னை ஆச்வாஸப்படுத்த வேண்டும்.

விச்வமய: 'விச்வமய' என்று கவி கூறியிருப்பது மிகவும் பொருத்தமானது. சிவனை எங்கிருந்தாவது வந்து என்னைக் காப்பாற்று என்கிறார். சிவன் இல்லாத இடமே இல்லை. ஆகையால்தான் 'விச்வமய' என்று ஸம்போதனம் செய்கிறார்.

पश्यन् समानवयसोऽपि यवीयसोऽपि
नक्तंदिवं यमभटैरपि नीयमानान् ।
आत्मन्यभूवमजरामरताभिमानी
यद्विप्लवादकरवं न शुभं कदाचित् ॥ ४२ ॥

பச்யன் ஸமான--வயஸோ(அ)பி யவீயஸோ(அ)பி
நக்தந்திவம் யமபடைரபி நீயமாநாந் |
ஆத்மன்யபூவமஜராமரதாபிமானீ
யத்--விப்லவாதகரவம் ந சுபம் கதாசித் ‖ (42)

**समान-वयसः अपि**-எனக்கு ஸமான வயது உடையவர்களையும் **यवीयसः अपि** - (எனக்கு வயதில்) சின்னவர்களையும் **नक्तंदिवं** - இரவிலும் பகலிலும் **यमभटैः** - யம படர்களால் **नीयमानान्** - இழுத்துக்கொண்டு போகப்படுபவர்களாக **पश्यन् अपि** - பார்த்துக் கொண்டிருந்தும் **आत्मनि** - என்னிடத்தில் **अजरता-अमरता-अभिमानी** - கிழத்தனமும் சாவும் இல்லை என்ற அபிமானம் கொண்டவனாய் **अभूवं** - இருந்தேன். **यद् - विप्लवात्** - எந்த மேற்கூறிய புத்திக்

குழப்பத்தால் **कदाचित्** - ஒருபொழுதும் **शुभं** - நல்ல காரியத்தை **न अकरवम्** - நான் செய்யவே யில்லை.

இரவிலும் பகலிலும் எனக்கு ஸமானமான வயதுள்ளவர்களையும் எனக்குக் கீழ் வயதுள்ளவர்களையும் யம படர்கள் இழுத்துப் போவதை நேரில் பார்த்துக் கொண்டே யிருக்கிறேன். என் கண் முன்பாக அவர்கள் இறப்பதைப் பார்த்துக்கொண்டிருந்தும், நான் மட்டும் இறக்கமாட்டேன் கிழவனாகமாட்டேன் என்ற இந்த அபிமானத்தால் குழப்பம் அடைந்து சுபமான காரியங்கள் ஒன்றும் எப்பொழுதும் செய்யவில்லை.

இதைத் தான் மஹாபாரதத்தில் யக்ஷப்ரச்னத்தில் சொல்லியிருக்கிறது.

अहन्यहनि भूतानि प्रविशन्ति यमालयम् ।
शेषाः स्थावरमिच्छन्ति किमाश्चर्यम् अतः परम् ॥

—மஹா பாரதம், வனபர்வம், 314. 118.

द्वारे लुठामि करुणं प्रलपामि शंभो
वाञ्छामि चुम्बितुमथो परिरभ्य च त्वाम् ।
वातूलतामुपगतोऽस्मि तवानुरागात्
हा दुःसहस्त्वयि ममैष दृढोऽनुरागः ॥ ४३ ॥

த்வாரே லுடாமி கருணம் ப்ரலபாமி சம்போ
வாஞ்சாமி சும்பிதுமதோ பரிரப்ய ச த்வாம் |
வாதூலதாமுபகதோ(அ)ஸ்மி தவானுராகாத்
ஹா துஸ்ஸஹஸ்த்வயி மமைஷ த்ருடோ(அ)னுராகः|| (43)

**हे शंभो** - ஏ (ஸுகத்தைப் பயக்கும்) சம்புவே! **द्वारे लुठामि** (உம்) வாசலில் புரளுகிறேன்; **करुणं** - தீனமாக **प्रलपामि** - பிதற்றுகிறேன்; **त्वां परिरभ्य** - உம்மை ஆலிங்கனம் செய்துகொண்டு **चुम्बितुं**- முத்தம் கொடுக்க **वाञ्छामि** ஆசைப்படுகிறேன். **तव अनुरागात्** - உம்மிடத்தில் இருக்கும் காதலால் **वातूलताम्** - பைத்யம் பிடித்திருக்கும் தன்மையை **उपगतः अस्मि** அடைந்திருக்கிறேன். **हा** அந்தோ! **त्वयि** - உம்மிடம் **मम** - எனக்கு **एष अनुरागः** இந்த அன்பு **दुःसहः** - தாங்க முடியாததாய் இருக்கிறது.



நான் வாசலில் புரள்கின்றேன். தீனமாய்ப் பிதற்றுகின்றேன். ஏ சம்போ! உம்மை ஆலிங்கனம் செய்துகொண்டு முத்தம் கொடுக்க விரும்புகிறேன். உம்மேல் இருக்கும் காதலால் பைத்தியம் பிடித்தவன் படும் துன்பங்களை அனுபவிக்கிறேன். அந்தோ! உம்மிடத்தில் எனக்கு இருக்கும் அன்பு என்னால் தாங்க முடியாததாய் இருக்கிறது.

இந்தச் சுலோகம் நாயக - நாயிகா - பாவ வர்ணனை. தேவாரத் திருவாசகங்களில் இம்மாதிரி நாயகியாய்க் கவி தன்னை வர்ணித்துக் கூறுவது வழக்கம். மாணிக்கவாசகப் பெருமான் அகப்பொருள் துறைகளையே முழுவதும் அமைத்த திருக்கோவையார் என்னும் நூலில் பகவானிடம் தனக்கு இருக்கும் காதலை மிக விரிவாகப் பாராட்டியுள்ளார்.

कण्ठेऽर्पयत्युरगपाशमसूयया मे
यामिन्यधोशशिख यत्समये कृतान्तः ।
नूनं तदा मुहुरुपैमि फणीन्द्रहार
त्वत्तुल्यतामिति भजे मरणेऽपि हर्षम् ॥ ४४ ॥

கண்டே (அ)ர்பயத்யுரக—பாசமஸூயயா மே
யாமின்யதீச—சிக யத்ஸமயே க்ருதாந்த: |

நாகம் ததா முஹுருபைமி பணீந்த்ரஹார
த்வத்துல்யதாமிதி பஜே மரணே(அ)பி ஹர்ஷம்|| (44)

**हे यामिनी - अधीश - शिख** - ராத்திரிக்கு அதிபதியான சந்திரனைத் தலையில் தரிக்கும் சந்திரசேகர! **मे कण्ठे** - என்னுடைய கழுத்தில் **यत्समये** - எந்த ஸமயத்தில் **असूयया** - பொறுமையால் **कृतान्तः** - யமனானவன் **उरगपाशं** - நாக பாசத்தை **अर्पयति** - போடுகிறானோ **तदा** - அப்பொழுது **नूनं** - நிச்சயமாய் **हे फणीन्द्रहार** - நாகத்தை மாலையாக உடைய பரமசிவ! **मरणे अपि** - மரணத்திலும் **त्वत्तुल्यताम्** - உம்முடன் ஸமானமாய் இருக்கும் தன்மையை **उपमि** - அடைகின்றேன் **इति** - என்று **मुहुः** அடிக்கடி **हर्षं भजे** - ஸந்தோஷத்தை அடைகிறேன்

கடைசிக் காலத்தில் யமன் என்னை அழைத்துக் கொண்டு போகும்போது தனது நாக பாசத்தை என் கழுத்தில் போடுகிறான். அப்பொழுது எனக்கு வருத்தமில்லை. ஏ சந்திரசேகர! தங்களுக்கு நாகங்கள் ஆபரணமாக ஆகவில்லையா? அதே மாதிரி யமன் என்மேல் போட்ட நாக பாசத்தையும் ஆபரணமாக எண்ணிக் கொண்டு தங்களுக்கு ஸமானமான ரூபத்தை அதாவது ஸாரூப்யத்தை அடைந்ததாக எண்ணிக்கொள்ளுகிறேன். ஆகையால் இப்படி நாக பாசத்துடன் இறப்பதிலும் எனக்குச் சந்தோஷந்தான்.

இதுவும் முன் சுலோகம்போல் நாயக - நாயிகா பாவத்தைக் காட்டுகிறது. நாயகி நாயகனுடைய வேஷத்தைத் தரித்துக்கொண்டும் நாயகன் செய்யும் கார்யங்களை எல்லாம் தான் செய்துகொண்டும், சந்தோஷிப்பதைக் கவிகள் வர்ணிப்பது வழக்கம். இதை நாட்டிய சாஸ்திரத்தில் 'லீலா' (लीला) என்று பரதமுனி வர்ணிக்கிறார்.



वागङ्गालङ्कारैः श्लिष्टैः प्रीतिप्रयोजितैर्मधुरैः ।
इष्टजनस्यानुकृतिर्लीला ज्ञेया प्रयोगज्ञैः ॥ भरतनाट्यशास्त्रम् ।
—பரத நாட்டிய சாஸ்திரம் 24-வது அத்யாயம் 14-வது ச்லோகம்.

चित्तं न पारदमिव क्षणमुज्झतीदं
चाञ्चल्यविप्लवमयुक्तिविदः प्रभो मे ।
तस्मात् कथं भवति भक्तिरसस्य सिद्धिः
कस्तां विना च भवघोरविपद्विनाशः ॥ ४५ ॥

சித்தம் ந பாரதமிவ க்ஷணமுஜ்ஜதீதம்
சாஞ்சல்ய-விப்லவமயுக்திவிதः ப்ரபோ மே |
தஸ்மாத் கதம் பவதி பக்தி-ரஸஸ்ய ஸித்திः
கஸ்தாம் விஞ ச பவ-கோர-விபத்-விஞசः|| (45)

**प्रभो** - ஏ ஸ்வாமி! **अयुक्तिविदः** - உபாயம் ஒன்றும் தெரியாத **मे** - என்னுடைய **चित्तं** - மனது **चाञ्चल्य - विप्लवम्** சாஞ்சல்ய ஸ்வபாவத்தால் நிலையற்ற தன்மையை **पारदम् इव** - ரஸம்போல் **क्षणं न उज्झति** - ஒரு க்ஷணம் கூட விடுகிறதில்லை. **तस्मात्** - ஆகையால் (எனக்கு) **भक्ति - रसस्य** - பக்தி ரஸத்தின் **सिद्धिः** - ஸித்தியானது (கை கூடுதலானது) **कथं भवति**-எப்படி உண்டாகும்? **तां विना** - அந்த பக்தி ரஸஸித்தி இல்லாமல் **भव-घोर-विपद्-विनाशः च कः** - ஸம்ஸாரமாகிற கோரமான ஆபத்தின் நாசமும் ஏது?

உபாயம் தெரியாத என்னுடைய மனமானது ரஸத்தைப்போல் ஒரு நிமிஷமும் ஒரு இடத்தில் ஸ்திரமாய் இருக்கிறதில்லை. ஆகையால் எனக்குப் பக்தி ரஸத்தின் ஸித்தி எப்படி உண்டாகும்? அந்தப் பக்தி ரஸத்தின் ஸித்தி இருந்தால் அன்றோ ஸம்ஸாரமாகிய கோரமான ஆபத்தை நாசம் செய்ய முடியும்.

ரஸம் என்னும் பதத்தைக் கவி மிகச் சமத்காரமாய் உபயோகப் படுத்தியிருக்கிறார். ரஸம் என்பது ஒரு க்ஷணம் கூட ஒரு இடத்தில் நில்லாது எப்பொழுதும் சஞ்சலஸ்வபாவம் உள்ளது. இந்த ரஸத்தினால் யோகிகள் யோகஸித்தி அடைவார்கள் என்று சாஸ்திரங்கள் கூறும். ஆனால் கவி தன்னிடம் பக்தி ரஸம் இல்லை, சஞ்சலஸ்வபாவம், ரஸத்தின் குணம், இருக்கிறது என்கிறார். மேலும் ரஸஸித்தி அதாவது ரஸத்தைக்கட்டியல்லவோ அதை ஒரு விபத்துக்கு மருந்தாக உபயோகப் படுத்த முடியும். அது முடியவில்லையே என்கிறார் கவி.

**स्वामिन्ननुद्गतविवेकलवोऽकृतात्मा**
**तिर्यग्वदेव दिवसानतिवाहयामि ।**
**नेता क्षणाच्च वशमन्तकसौनिको माम्**
**आशैव तन्मम कुतः सुगतिप्रसक्त्यै ॥ ४६ ॥**

ஸ்வாமிந்நநுத்கத-விவேக-லவோ (அ)க்ருதாத்மா
திர்யக்வதேவ திவஸாநதிவாஹயாமி |
நேதா க்ஷணாச்ச வசமந்தக-ஸௌநிகோ மாம்
ஆசைவ தந்மம குதஃ ஸுகதி-ப்ரஸக்த்யை. || (46)

**हे स्वामिन्** - ஏ ஸ்வாமின்! **अनुद्गत - विवेक-लवः** - விவேகத்தின் லேசமும் உண்டாகாதவனும் **अकृतात्मा** - தன்னைத் தான் வசப்படுத்திக் கொள்ளாதவனும் **तिर्यग्वदेव** - ம்ருகங்களைப்போல **दिवसान्** - நாட்களை **अतिवाहयामि** - கழிக்கிறேன். **क्षणात्** - ஒரு க்ஷணத்தில் **अन्तक - सौनिकः** கொலையாளியாகிய யமன் **मां** - என்னை **वशं नेता** - தன் வசம் கொண்டுபோகப் போகிறான். **तत्** - ஆகையால் **मम** - எனக்கு **सुगति-प्रसक्त्यै** - நல்லகதி ஏற்படும் என்



பதற்கு आशा एव कुतः - நம்பிக்கைகூட எங்கிருந்து உண்டாகும்?

ஏ ஸ்வாமின்! விவேகத்தின் லேசமும் உண்டாகவில்லை. இந்திரிய நிக்ரஹமும் செய்யவில்லை. தினந்தோறும் மிருகங்களைப்போல் நாட்களைக் கழித்து வருகிறேன். இந்தப் பாழும் யமன் வந்து ஒரு நிமிஷத்தில் கொண்டுபோய்விடப் போகிறான். எனக்கு நல்லகதி கிடைக்கும் என்ற நம்பிக்கை எங்கிருந்து உண்டாகும்?

திர்யக்: ஆதி ஆசார்யர்களான ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் ஆத்மஞானமில்லாதவர்களைப்பற்றி **पश्वादिभिश्च अविशेषात्** என்று பிரம்ம ஸூத்ர பாஷ்யோபக்ரமத்தில் மிருகங்களுக்கும் ஆத்மஜ்ஞான மில்லாதவர்களுக்கும் யாதொரு வித்யாஸமும் இல்லை என்று சொல்லுகிறார்.

**दुःस्वप्न एष विषमो भवदुःखनामा**
**स्वामिन् कथं त्यजति मां विगतप्रबोधम् ।**
**यस्मान्ममानवरतश्रुतभूरिशास्त्र-**
**तूर्यस्वनैरपि न शाम्यति मोहनिद्रा ॥ ४७ ॥**

துஸ்ஸ்வப்ன ஏஷ விஷமோ பவ-து:க-நாமா
ஸ்வாமிந் கதம் த்யஜதி மாம் விகத-ப்ரபோதம் |
யஸ்மாந் மமாநவரத-ச்ருத-பூரி-சாஸ்த்ர-
தூர்யஸ்வநைரபி ந சாம்யதி மோஹ-நித்ரா || (47)

**यस्मात्** - எதனால் **मम** - எனது **मोहनिद्रा** - மோக நித்ரையானது **अनवरत - श्रुत- भूरि - शास्त्र - तूर्य - स्वनैः अपि** - இடைவிடாமல் கேட்கப்பட்ட அநேக சாஸ்திரங்கள் ஆகிற பறைகளின் சப்தங்களாலும் **न शाम्यति** - முடிவடையவில்லையோ, அப்படிப்பட்ட **भव-दुःख - नामा** ஸம்ஸார துக்கம் என்று பெயர்கொண்ட **एषः** - இந்த

**विषमः** - கொடிய **दुःस्वप्नः** - கெட்ட ஸ்வப்னம் **विगतप्रबोधं मां** - விழிப்பை இழந்த (தூங்கிக்கொண்டிருக்கும்) என்னை **हे स्वामिन्** - ஏ நாத ! **कथं त्यजति** - எப்படி விடும்?

மோஹமென்னும் தூக்கமானது சாஸ்திரங்களைக் கேட்டல் என்னும் வாத்ய கோஷங்களாலேயே முடிவு அடைகிறதில்லையே? அப்படி இருக்க ஸம்ஸாரத்தின் துக்கம் என்று பெயர்கொண்ட கொடிய கெட்ட ஸ்வப்னம் தூங்கிக்கொண்டு இருக்கும் என்னை எப்படி விடும்?

கும்பகர்ணனுடைய நித்ரைபோன்ற தூக்கம் தன்னுடைய மோகம் என்று கவி மனத்தில் வைத்துக்கொண்டிருக்கிறார்.

**कृत्वा पापमसावपोष्यत निजः कायो न दीनो जनः**
**वैवश्याल्लुठितं चिरं चरणयोः स्त्रीणां गुरूणां न तु ।**
**लोभोऽकारि मया धने न सुकृते तेनानुतप्ये महत्**
**किं शक्यं मम तत्र कर्तुमधुना नाथ त्वमेका गतिः ॥४८॥**

க்ருத்வா பாபமஸாவபோஷ்யத நிஜஃ காயோ ந தீனோ ஜனஃ
வைவச்யால் லுடிதம் சிரம் சரணயோஸ்
ஸ்த்ரீணாம் குரூணாம் ந து ।
லோபோ(அ)காரி மயா தனே ந ஸுக்ருதே
தேனானுதப்யே மஹத்
கிம் சக்யம் மம தத்ர கர்துமதுநா நாத த்வமேகா கதிஃ ॥

**पापं कृत्वा** - பாபத்தைச் செய்து **असौ** - இந்த **निजः कायः** - என்னுடைய தேகம் **अपोष्यत** - வளர்க்கப்பட்டது. **दीनो जनः** ஏழை ஜனம் **न (अपोष्यत)** போஷிக்கப்படவில்லை. **वैवश्यात्** பரவசமான தன்மையால் **स्त्रीणां** - ஸ்த்ரீகளுடைய **चरणयोः** கால்களில் **चिरं** - வெகுகாலம் **लुठितं** - புரளப்பட்டது. **गुरूणां** - ஆனால் குருவானவர்களுடைய (**चरणयोः**



கால்களில்) **न तु (लुठितम्)** புரளப்படவில்லை. **धने** - தனத்தில் **लोभः** - பேராசையானது **अकारि** - வைக்கப்பட்டது. **सुकृते न (लोभः अकारि)** (ஆனால்) நல்ல காரியம் செய்வதில் (ஆசை வைக்கப்பட) இல்லை. **तेन** - அதனால் **महत्** - மிகவும் **अनुतप्ये** - வருந்துகிறேன். **मम** - எனக்கு **तत्र** - மேற்சொன்ன விஷயத்தில் **किं कर्तुं शक्यं** என்ன செய்ய முடியும்? **हे नाथ** - ஏ ஸ்வாமின் ! **अधुना** - இப்பொழுது **त्वं** - நீர் **एका गतिः** - ஒரே கதி.

பல பாபங்களைச் செய்து இந்த என்னுடைய தேகத்தை வளர்த்தேனே யொழிய ஏழை ஜனங்களுக்கு அன்னம் இட்டு அறியேன். பரவசனாய் ஸ்திரீகள் கால்களில் விழுந்தேனே ஒழியக் குருவின் பாத கமலங்களில் ஸேவை செய்யவில்லை. பணத்தை ஸம்பாதிக்கப் பேராசை கொண்டேனே யொழிய ஸத்கார்யங்கள் செய்ய ஆசை கொள்ளவில்லை. இப்படி வாழ்நாளைக் கழித்ததால் மிகவும் வருந்துகின்றேன். இப்பொழுது என்னால் என்ன செய்ய முடியும்? தாங்கள் தாம் இப்பொழுது எனக்கு ஒப்பற்ற ஒரே கதி.

**अहं पापो पापक्षपणनिपुणः शंकर भवान्**
**अहं भीतो भीताभयवितरणे ते व्यसनिता ।**
**अहं दीनो दीनोद्धरणविधिसज्जस्त्वमितरत्**
**न जानेऽहं वक्तुं कुरु सकलशोच्ये मयि दयाम् ॥४९॥**

அஹம் பாபீ பாப—க்ஷபண—நிபுணஃ சங்கர பவான்
அஹம் பீதோ பீதா(அ)பய—விதரணே தே வ்யஸநிதா ।
அஹம் தீனோ தீனோத்தரண—விதி—ஸஜ்ஜஸ் த்வமிதரத்
ந ஜானே(அ)ஹம் வக்தும் குரு ஸகல—சோச்யே மயி தயாம் ॥
(49)

अहं पापी - நானோ பாபி; हे शंकर-ஏ சங்கர! भवान् - நீரோ पाप-क्षपण-निपुणः பாபத்தைப் போக்குவதில் ஸமர்த்தர். अहं भीतः - நானோ பயந்தவன்; भीत-अभयवितरणे பயப்பட்டவர்களுக்கு அபயம் அளிப்பதில் ते - உமக்கு व्यसनिता - விசேஷமான ஈடுபாடு; अहं दीनः - நானோ தீனன்; त्वं दीन-उद्धरण-विधि-सज्जः நீரோ தீனர்களைக் கை தூக்கிவிடும் காரியத்தில் ஸஜ்ஜரானவர்; इतरत् - இதைத் தவிர வேறு ஒன்றும் वक्तुं - சொல்ல न जाने - நான் அறியேன்; सकल-शोच्ये मयि - எல்லாராலும் எல்லாவிதத்திலும் வருந்தத்தக்கவனான என்னிடம் दयां कुरु - தயையைச் செய்யுங்கள்.

நானோ பாவி, நீரோ பாபத்தைப் போக்குவதில் ஸமர்த்தர். நானோ பயந்தவன், நீரோ பயந்தவர்களுக்கு அபயம் (பயமில்லாதிருக்கும் தன்மையை) அளிப்பதில் விசேஷ ஈடுபாடு உடையவர். நானோ தீனன், நீரோ தீனர்களைக் கைதூக்கிவிடும் கார்யத்தில் ஸஜ்ஜரானவர். இதைத் தவிர வேறு ஒன்றும் நான் சொல்ல அறிகிலேன். எல்லாவிதத்திலும் வருந்தத்தக்கவனாகிய என்னிடம் தயை செய்யுங்கள்.

इति परिहृतवान् स्वकाव्यशिल्प-
प्रकटनमाकुलितो भवव्यथाभिः ।
व्यधित गिरिश रम्यदेवजन्मा
तव पुरतो हठदैन्यतः प्रलापान् ॥ ५० ॥

இதி பரிஹ்ருதவான் ஸ்வ–காவ்ய–சில்ப–
ப்ரகடனமாகுலிதோ பவ–வ்யதாபி: |
வ்யதித கிரிச ரம்யதேவ–ஜன்மா
தவ புரதோ ஹட–தைன்யத: ப்ரலாபான் || (50)



हे गिरिश - ஏ பரமசிவ! इति - இந்த ப்ரகாரம் भव-व्यथाभिः-ஸம்ஸார துக்கங்களினால் आकुलितो रम्यदेव-जन्मा- துன்புறுத்தப்பட்டவனான ரம்யதேவனுக்கு புத்திரனான (லோஷ்டதேவன்) स्व-काव्य-शिल्प-प्रकटनम् தன்னுடைய காவ்யக் கலையின் ப்ரகடனத்தை परिहृतवान् பரிஹரித்தவனாய் प्रलापान् - இந்தப் புலம்பல்கள் அடங்கிய ஸ்தோத்திரத்தை तव पुरतः தங்களுக்கு முன்பு हठदैन्यतः - மிகவும் எளிமையினால் व्यधित - செய்தான்.

இந்த ப்ரகாரம் ரம்யதேவரின் புத்ரனாகிய லோஷ்டதேவனாகிய நான் மற்ற காவ்யங்களை இயற்றுதல் என்ற தோஷத்திற்கு இந்த தீனாக்ரந்தன ஸ்தோத்ரத்தைச் செய்த ப்ராயச்சித்தத்தால் பரிஹாரஞ் செய்துகொண்டேன். புலம்பல்கள் அடங்கிய இந்த தீனாக்ரந்தன ஸ்தோத்திரத்தை உமக்கு முன்பு இயற்றினேன்.

குறிப்பு :—50, 51, 52, 53 ச்லோகங்களால் இந்த தீனாக்ரந்தன ஸ்தோத்ரம் காசியில் ஸ்ரீ விச்வேச்வரருக்கு முன்பு இயற்றப்பட்டு ஸ்ரீ விச்வேச்வரருக்கு நேரிலேயே ஸமர்ப்பணம் செய்யப்பட்டதென்று ஸ்பஷ்டமாக த்வனிக்கின்றது.

एतत्तीव्रं व्रतमुपचितं सैकते सिद्धसिन्धोः
वाराणस्यां शमदमदृशोरेष गाढोऽनुबन्धः ।
दीनाक्रन्दं प्रति पशुपतेरुद्यमश्चाटुकानि
त्यक्त्वा राज्ञां बत मम शुभैस्तन्यते धन्यतेयम् ॥५१॥

ஏதத் தீவ்ரம் வ்ரதமுபசிதம் ஸைகதே ஸித்த–ஸிந்தோ:
வாராணஸ்யாம் சம-தம-த்ருசோரேஷ காடோ(அ)னுபந்த: |

தீனாக்ரந்தம் ப்ரதி பசுபதேருத்யமச் சாடுகானி
த்யக்த்வா ராஜ்ஞாம் பத மம சுபைஸ் தன்யதே தன்ய-
தேயம். ||

**वाराणस्यां**-காசியில் **सिद्धसिन्धोः सैकते**-ஸித்தர்களால் சேவிக்கப்பட்ட நதியான கங்கையின் மணலில் (கரையில்) **एतत्** - இந்த **तीव्रं व्रतम् उपचितं** - இந்த தீவ்ரமான வ்ரதம் அனுஷ்டிக்கப்பட்டது. **शम-दम-दृशोः** - சமம், தமம் என்ற இரண்டு த்ருஷ்டிகளை அடைவதன் பொருட்டு **एषः**- இந்த **गाढः अनुबन्धः** - திருடமான தொடர்ந்த முயற்சியானது வைத்துக் கொள்ளப்பட்டது. **राज्ञां** - ராஜாக்களுக்கு ப்ரீதியான **चाटुकानि** - சாடுமொழிகளை **त्यक्त्वा** - விட்டு விட்டு **पशुपतेः** - பசுபதியைக் குறித்து **दीनाक्रन्दं प्रति** - (என் ஏழ்மையால் எழுந்த கதறல் ரூபமான) இந்த தீனாக்ரந்தன ஸ்தோத்திரத்திற்காக **उद्यमः** - முயற்சியானது (எடுத்துக் கொள்ளப்பட்டது). **इयं धन्यता** - இந்த கிருதார்த்தமாகுதல் **तन्यते** - விரிவாய்ச் செய்யப்பட்டு வருகிறது.

ஞானம் என்பதற்கு 'சமம்' 'தமம்' என்பது இரண்டு கண்கள். இதை அடையக் காசியில் கங்கைக் கரையை விட்டு ஆயுஸு வரையில் அகலுவதில்லை என்று காசிக்ஷேத்திரத்தில் "க்ஷேத்திர ஸந்யாஸம்" என்னும் விரதத்தைக் கைக்கொண்டேன். ராஜாக்களுக்கு ப்ரீதியான சாடுக்கள் இயற்றுவதை விட்டுவிட்டேன். பசுபதியான விச்வேச்ரரின் பொருட்டு இந்த தீனாக்ரந்தன ஸ்தோத்திரத்தை இயற்றினேன். இதனால் நான் தந்யன் ஆனேன்.

கங்கை: "இடைக்காட்டுச் சித்தர் என்று ஒருவர் இருந்தார். அவர் 'காணாமற் கோணாமற் கண்டு கொடு; ஆடு; காண்; போகுது பார் போகுது பார்'; என்றார்.



முதல் மூன்றும் மூன்றுகால ஸந்த்யாவந்தனத்தையும் குறிக்கும்; ஆடு என்றால் நீராடு; கங்கையில் ஸ்நானமும் பண்ணு என்பது அர்த்தம்; காண் என்றால் ஸேது தர்சனம் பண்ணு என்று அர்த்தம்; போகுது என்றால் ஷை கங்கா ஸ்நாநத்தாலும் ஸேது தர்சனத்தாலும் நம் பாபம் தொலைகிறது; இதைப் பார் என்று சொன்னார். ஜன்மத்தில் ஒருதரமாவது கங்கா ஸ்நானமும் ஸேது தர்சனமும் பண்ணவேண்டும்."

ஆசார்ய ஸ்வாமிகள் அருளிய நன்மொழிகள் I. 500-501 பக்கம்.

காசி: "உலகத்தில் உள்ள க்ஷேத்திரங்களுள் காசி அதிக மகிமையுடையது என்று நினைக்கப்படுகிறது. வேறு க்ஷேத்திரங்களைப்பற்றி சொல்லும்போதெல்லாம் அவை காசிக்கு ஸமானமானவை என்கிறார்கள். அதனால் காசியினுடைய மகிமை தெரிகிறது. காசியை உபமானமாகச் சொல்லிச்சொல்லி அதற்கு இன்னும் கௌரவத்தை உண்டாக்கி வருகிறார்கள். 100 வருஷங்களுக்கு முன் ஒரு கவி உத்தம க்ஷேத்திரங்களுக்குள் எதை உபமானமாகச் சொல்லிப் பிரசித்திவருகிறதோ அது காசி, அங்கே பக்தியாகிய காசைக் கொடுத்தால் முக்தியைச் சுலபமாக வாங்கலாம், அது கிடைக்கும் கடைத்தெருவு காசிதான் என்று சொல்லி யிருக்கிறார்கள்.

ஆசார்ய ஸ்வாமிகள் அருளிய நன்மொழிகள் I 259-260.

"காசி மகா க்ஷேத்ரம். அங்கே விச்வேச்வரர் இறந்து போகும் ஒவ்வொரு பிராணிக்கும் ஞானோபதேசம் செய்து முக்தி கொடுக்கிறார். இந்த வகையில் இல்லாமல் வேறு விதத்திலும் காசி க்ஷேத்திரத்திற்கு விசேஷம் இருக்கிறது. நம்முடைய தேசத்தில் அநேக மதங்கள் இருக்கின்றன. எல்லா மதங்களுடைய பிரதிநிதிகளும்

தீனாக்ரந்தம் ப்ரதி பசுபதேருத்யமச் சாடுகானி
த்யக்த்வா ராஜ்ஞாம் பத மம சுபைஸ் தன்யதே தன்ய—
தேயம். ||

**वाराणस्यां**-காசியில் **सिद्धसिन्धोः सैकते**-ஸித்தர்களால் ஸேவிக்கப்பட்ட நதியான கங்கையின் மணலில் (கரையில்) **एतत्** - இந்த **तीव्रं व्रतम् उपाचितं** - இந்த தீவ்ரமான வ்ரதம் அனுஷ்டிக்கப்பட்டது. **शम-दम-दृशोः** - சமம், தமம் என்ற இரண்டு த்ருஷ்டிகளை அடைவதன் பொருட்டு **एषः**- இந்த **गाढः अनुबन्धः** - திருடமான தொடர்ந்த முயற்சியானது வைத்துக் கொள்ளப்பட்டது. **राज्ञां** - ராஜாக்களுக்கு ப்ரீதியான **चाटुकानि** - சாடுமொழிகளை **त्यक्त्वा** - விட்டு விட்டு **पशुपतेः** - பசுபதியைக் குறித்து **दीनाक्रन्दं प्रति** - (என் ஏழ்மையால் எழுந்த கதறல் ரூபமான) இந்த தீனாக்ரந்தன ஸ்தோத்திரத்திற்காக **उद्यमः** - முயற்சியானது (எடுத்துக் கொள்ளப்பட்டது). **इयं धन्यता** - இந்த கிருதார்த்தமாகுதல் **तन्यते** - விரிவாய்ச் செய்யப்பட்டு வருகிறது.

ஞானம் என்பதற்கு 'சமம்' 'தமம்' என்பது இரண்டு கண்கள். இதை அடையக் காசியில் கங்கைக் கரையை விட்டு ஆயுஸ்ஸு வரையில் அகலுவதில்லை என்று காசிக்ஷேத்திரத்தில் "க்ஷேத்திர ஸந்யாஸம்" என்னும் விரதத்தைக் கைக்கொண்டேன். ராஜாக்களுக்கு ப்ரீதியான சாடுக்கள் இயற்றுவதை விட்டுவிட்டேன். பசுபதியான விச்வேச்ரரின் பொருட்டு இந்த தீனாக்ரந்தன ஸ்தோத்திரத்தை இயற்றினேன். இதனால் நான் தந்யன் ஆனேன்.

கங்கை: "இடைக்காட்டுச் சித்தர் என்று ஒருவர் இருந்தார். அவர் 'காணாமற் கோணாமற் கண்டு கொடு; ஆடு; காண்; போகுது பார் போகுது பார்'; என்றார்.



முதல் மூன்றும் மூன்றுகால ஸந்த்யாவந்தனத்தையும் குறிக்கும்; ஆடு என்றால் நீராடு; கங்கையில் ஸ்நானமும் பண்ணு என்பது அர்த்தம்; காண் என்றால் ஸேது தர்சனம் பண்ணு என்று அர்த்தம்; போகுது என்றால் ஷை கங்கா ஸ்நாநத்தாலும் ஸேது தர்சனத்தாலும் நம் பாபம் தொலைகிறது; இதைப் பார் என்று சொன்னார். ஜன்மத்தில் ஒருதரமாவது கங்கா ஸ்நானமும் ஸேது தர்சனமும் பண்ணவேண்டும்."

ஆசார்ய ஸ்வாமிகள் அருளிய நன்மொழிகள் I. 500-501 பக்கம்.

காசி: "உலகத்தில் உள்ள க்ஷேத்திரங்களுள் காசி அதிக மகிமையுடையது என்று நினைக்கப்படுகிறது. வேறு க்ஷேத்திரங்களைப்பற்றி சொல்லும்போதெல்லாம் அவை காசிக்கு ஸமானமானவை என்கிறார்கள். அதனால் காசியினுடைய மகிமை தெரிகிறது. காசியை உபமானமாகச் சொல்லிச்சொல்லி அதற்கு இன்னும் கௌரவத்தை உண்டாக்கி வருகிறார்கள். 100 வருஷங்களுக்கு முன் ஒரு கவி உத்தம க்ஷேத்திரங்களுக்குள் எதை உபமானமாகச் சொல்லிப் பிரசித்திவருகிறதோ அது காசி, அங்கே பக்தியாகிய காசைக் கொடுத்தால் முக்தியைச் சுலபமாக வாங்கலாம், அது கிடைக்கும் கடைத்தெருவு காசிதான் என்று சொல்லி யிருக்கிறார்கள்.

ஆசார்ய ஸ்வாமிகள் அருளிய நன்மொழிகள் I 259-260.

"காசி மகா க்ஷேத்ரம். அங்கே விச்வேச்வரர் இறந்து போகும் ஒவ்வொரு பிராணிக்கும் ஞானோபதேசம் செய்து முக்தி கொடுக்கிறார். இந்த வகையில் இல்லாமல் வேறு விதத்திலும் காசி க்ஷேத்திரத்திற்கு விசேஷம் இருக்கிறது. நம்முடைய தேசத்தில் அநேக மதங்கள் இருக்கின்றன. எல்லா மதங்களுடைய பிரதிநிதிகளும்

காசி க்ஷேத்திரத்தில் இருப்பார்கள். அந்தக் காலத்தில் மஹா பண்டிதர்கள் இருந்த ஸ்தானமாக அது இருந்தது. யாத்திரை பண்ணிக்கொண்டே பல பேர்கள் அங்கு வந்து தங்கி இருப்பார்கள். நம்முடைய தேசத்தில் எத்தனை ஜாதி, எத்தனை மதங்கள், எத்தனை பாஷைகள் இருக்கின்றனவோ அவ்வளவையும் அங்கே பார்க்கலாம். ஆகையால் அங்கே போய்ப் பிரசாரம் செய்தால் லோகம் முழுவதும் பிரசாரம் ஆகும் என்று நமது ஸ்ரீ ஆதி ஆசார்யாளவர்கள் நினைத்தார்கள். பல தேசங்களில் உள்ள வைதிகர்கள் (வேதம் அறிந்த வித்வான்கள்) அங்கே இருந்தார்கள். ஆகையால் ஸ்ரீ ஆதி சங்கராசார்ய ஸ்வாமிகள் காசி க்ஷேத்திரத்தில் இருக்கும் பொழுது பிரம்ம ஸூத்ர பாஷ்யம் இயற்றினார். அதனால் காசியில் ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யம் பண்ணினது லோகப்ரசாரத்திற்கு ஏது (ஹேது) வாயிற்று. அங்கே பல மதஸ்தர்களுடைய கொள்கைகளை நிராகரணம் பண்ணி ஔபநிஷதமான மதத்தை ஸ்தாபித்தார்.''

ஆசார்ய ஸ்வாமிகள் அருளிய நன்மொழிகள்

II. சங்கர விஜயம் 155–156.

**अभ्रंशे जन्म वंशे सुमहति विहितो वाङ्मयाब्धौ हनूमत्-**
**संरम्भो दानभोगौ तदनु च रचितौ किंचिदौचित्यरीत्या ।**
**ज्ञात्वा तत्त्वं यतित्वं श्रितमथ मथिता संसृतिर्दुर्निवारा**
**वाराणस्यां प्रसन्ना स्थितिरिति कृतिनः किं न मे नाम सिद्धम् ॥५२॥**

அப்ரம்சே ஜன்ம வம்சே ஸுமஹதி விஹிதோ வாங்மயாப்தௌ ஹனூமத்–
ஸம்ரம்போ தான–போகௌ ததநு ச ரசிதௌ கிஞ்சிதௌசித்ய–ரீத்யா
ஜ்ஞாத்வா தத்வம் யதித்வம் ச்ரிதமத மதிதா ஸம்ஸ்ருதிஃ துர்நிவாரா
வாராணஸ்யாம் ப்ரஸந்நா ஸ்திதிரிதி க்ருதிநஃ கிம் ந மே நாம ஸித்தம் ॥ (52)



**अभ्रंशे सुमहति वंशे जन्म** - வழுவில்லாத உயர்ந்த வம்சத்தில் பிறப்பு **वाङ्मयाब्धौ** - காவ்யம் என்கிற சமுத்திரத்தில் **हनूमत्संरम्भः** - ஹனுமாரைப்போல் தாண்டுதல் **विहितः** - செய்யப்பட்டது. **तदनु** - அதற்குப்பிறகு **औचित्यरीत्या** - உசிதமான முறையில் **दानभोगौ च** - தானமும் காமபோகமும் **किंचित्** - கொஞ்சம் **रचितौ** - செய்யப்பட்டன. **तत्त्वं ज्ञात्वा** - தத்வத்தை உணர்ந்து **यतित्वं श्रितं** - ஸந்யாஸமும் கொள்ளப்பட்டது. **अथ** - அதன்மேல் **दुर्निवारा** - தடுக்கமுடியாத **संसृतिः** ஸம்ஸாரம் **मथिता** - கடையப்பட்டது. **वाराणस्यां** - காசியில் **स्थितिः** - வாஸம் **प्रसन्ना** - நன்கு ஏற்பட்டது. **इति** - இந்தப்ரகாரம் **कृतिनः** காரியம் கைகூடிய **मे** - எனக்கு **किं नाम** - எதுதான் **न सिद्धम्** - ஸித்திக்கவில்லை.

நான் மாசற்ற வம்சத்தில் பிறந்தேன். ஹனுமான் ஸமுத்ரத்தைத் தாண்டியதைப்போல் நான் காவ்யம் என்னும் ஸமுத்ரத்தைத் தாண்டினேன். அதாவது பல காவியங்களை இயற்றினேன். பிறகு சாஸ்த்ரங்களில் கூறியபடி தானம் செய்தேன். சாஸ்த்ர விரோதமில்லாமல் போகத்தையும் கொஞ்சம் அனுபவித்தேன். பிறகு தத்வத்தை உணர்ந்து ஸந்யாஸ ஆச்ரமத்தை கைக்கொண்டேன். ஸந்யாஸஆச்ரமத்தைக் கைக்கொண்டதால் தாண்ட முடியாத ஸம்ஸாரம் என்னும் ஸமுத்ரத்தைத் தாண்டினேன். காசியில் க்ஷேத்ர ஸந்யாஸம் பூண்டேன்.

இம்மாதிரி கிருதக்ருத்யனாகிவிட்டேன். எனக்கு என்ன தாம் ஸித்திக்கவில்லை?

க்ஷேத்ர ஸங்யாஸம்: காசி க்ஷேத்திரத்தில் காசி எல்லையை விட்டு எக்காரணம் பற்றியும் அகலுவதில்லை என்று பிரமாணம் செய்து காசியிலேயே வசிப்பதற்கு க்ஷேத்ர ஸங்யாஸம் என்று பெயர். இதைத்தான் கவி குறிப்பிடுகிறார். க்ஷேத்ர ஸங்யாஸம் என்னும் தர்மத்தை ஸங்யாஸிகள் மட்டுமல்ல, கிருஹஸ்தர்களும் பெண்டிரும் எல்லோரும் கைக்கொள்ளலாம். இக்காலம் வரையிலும் இந்தத் தர்மம் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது.

**ईर्ष्यायै परवादिनां कविकलाकान्ता यतिं मामियं**
**यच्चुम्बत्यधुनापि तन्मयि भवत्यब्रह्मचर्यं न किम् ।**
**एतावत्स्खलितं क्षमस्व भगवन् भूयोऽपि तुभ्यं शपे**
**श्रीविश्वेश्वर देव नैव भवितास्म्यस्या रहस्यातिथिः ॥ ५३ ॥**

ஈர்ஷ்யாயை பரவாதினாம் கவி-கலா-காந்தா யதிம் மாமியம்
யச்சும்பத்யதுனா(அ)பி தன்மயி பவத்யப்ரஹ்மசர்யம் ந கிம்
ஏதாவத் ஸ்கலிதம் க்ஷமஸ்வ பகவன் பூயோ(அ)பி துப்யம் சபே
ஸ்ரீ விச்வேச்வர தேவ நைவ பவிதாஸ்ம்யஸ்யா ரஹஸ்யாதிதி:॥ (53)

**परवादिनाम् ईर्ष्यायै** - எதிரிகளின் பொறாமைக்குக் காரணமாக **इयं कवि-कला-कान्ता** - இந்தக் கவித்வம் என்கிற காதலி **यतिं माम् अधुनापि चुम्बति**-ஸந்நியாஸியான என்னையும் இப்பொழுதும் முத்தம் கொடுக்கிறாள். **मयि**-என்னிடத்தில் **तत्** - அது **अब्रह्मचर्यं किं न भवति** - பிரம்மசர்யத்தை விட்டமாதிரி ஆகவில்லையா என்ன? **एतावत् स्खलितं क्षमस्व**- இந்த வழுவுதலை மட்டும் பொறுத்துக் கொள்ளும்.



**हे भगवन्** - ஏ பகவன்! **हे देव** - ஏ ஸ்வாமி! **हे विश्वेश्वर** - ஏ விச்வேச்வர! **अस्याः रहस्यातिथिः** - கவிகலை என்னும் இந்தக் காதலிக்கு ரகஸ்யமான அதிதியாகக்கூட **नैव भवितास्मि** - இனி ஆகமாட்டேன் (என்று) **तुभ्यं** - உமக்கு **भूयोऽपि** மறுபடியும் **शपे** - சபதம் செய்கிறேன்.

காவியம் இயற்றுவதை, கவிதா என்னும் வனிதையானவள் கவியை ஆலிங்கனம் செய்துகொள்வதாகச் சொல்வது வழக்கம். அப்படி, ஸங்யாஸியான பிறகும் தீனாக்ரந்தன ஸ்தோத்ரம் இயற்றியதால் கவிதை என்னும் மாது ரஹஸ்யத்தில் தன்னுடன்கூடித் தன்னை முத்தம் கொடுத்த மாதிரி ஆகிறது. ஆனால் ஸங்யாஸி பிரம்மசர்யம் அல்லவோ கைக்கொள்ளவேண்டும். ஆகையால் ஏ விச்வேச்வர! உம்மேல் ஆணையிட்டுக் கூறுகிறேன். இனி நான் ஒரு காவியமும் செய்வதில்லை. இந்த தீனாக்ராந்தன ஸ்தோத்ரம் செய்ததை மட்டும் பொறுத்துக் கொள்ளும், என்கிறார் கவி.

**तस्मात् पाण्डित्य निर्विद्य बाल्येन तिष्ठासेत्** என்ற சுருதிப்படி கவி சாஸ்திர காவ்ய பரிசயத்தைக்கூடத் துறக்கின்றார்.

**नासत्यव्यतिरेकतोऽक्षरमपि प्रायुङ्क्त यद्भारती**
**नैवान्यत्परबाधतो यदसकृत्संचिन्तितं चेतसा ।**
**नाकृत्यादितरत्र गात्रमतनोच्चेष्टां यथेष्टं च यत्**
**सर्वत्रापि मया त्वमेव शरणं तत्राश्रितो धूर्जटे ॥ ५४ ॥**

நாஸத்ய-வ்யதிரேகதோ (அ)க்ஷரமபி
ப்ராயுங்க்த யத்பாரதீ
நைவான்யத் பரபாததோ யதஸக்ருத்
ஸஞ்சிந்திதம் சேதஸா |

நா(அ)க்ருத்யாதிதரத்ர காத்ரமதனோத் சேஷ்டாம் யதேஷ்டம் ச யத்
ஸர்வத்ரா(அ)பி மயா த்வமேவ சரணம் தத்ராச்ரிதோ தூர்ஜடே || (54)

**भारती** - வாக்கானது **असत्य-व्यतिरेकतः** - அஸத்யத் தொடர்பில்லாமல் **अक्षरम् अपि** - ஒரு அக்ஷரம்கூட **यत् न प्रायुङ्क्त**-பிரயோகம் செய்யவில்லை என்பதேதோ **परबाधतः अन्यत्**-பிறருக்குக் கெடுதல் செய்வதைத் தவிர வேறு எதுவும் **असकृत्**- அடிக்கடி **चेतसा यत् न संचिन्तितं** - மனத்தால் யோஜிக்கப்படவில்லை என்பதேதோ, **अकृत्यात् इतरत् चेष्टां** - அக்ருத்யத்தைத் தவிர வேறு எந்த சேஷ்டையையும் **गात्रं**-தேகமானது **यथेष्टं**-இஷ்டப்பட்டு **यत् न अतनोत्** - செய்யவில்லை என்பது எதோ **तत्र सर्वत्रापि** - அந்த எல்லா விஷயங்களிலும் **हे धूर्जटे** - ஏ தூர்ஜடே! **त्वमेव** - நீரே **शरणं** - சரணமாய் **मया आश्रितः** - என்னால் ஆச்ரயிக்கப்பட்டு இருக்கிறீர்.

**धूर्जटिः** - பெரிய ஜடா மகுடத்தை உடையவர். சிவனுக்கு உரிய பெயர்.

என் வாக்கானது அஸத்யத்தோடு கலக்காமல் ஒரு அக்ஷரமும் கூடப் பிரயோகம் செய்யவில்லை. என் மனமானது பிறருக்குக் கெடுதலை நினைப்பதைத் தவிர வேறு ஒன்றும் நினைக்கவில்லை. என் தேகத்தால் அக்ருத்யத்தைத் தவிர வேறு யாதொரு சேஷ்டையும் செய்யவில்லை. ஆகையால் தாங்களே இந்த எல்லாவற்றிலும் சரணம். ஹே தூர்ஜடே! நான் உங்களையே சரணமாக அடைகிறேன்.

**ओम् तत् सत्**

